மூ.—முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலைமூவா
மூவுலகுங்கடந்தப்பால்முதலாய்நின்ற
அளப்பரியவாரமுதையரங்கமேய
வந்தணனையந்தணர்தஞ்சிந்தையானை
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று
மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. (கச)

பதம்.—முளைகதிரை, குறுங்குடியுள்முகிலை, மூவாமூவுலகுங்கடந்து, அப்பால், முதலாய், (ரு) நின்ற, அளப்பரிய, ஆரமுதை, அரங்கம், மேய,(க0) அந்தணனை, அந்தணர் தம்சிந்தையானை, விளக்கொளியை, திருத்தண்காவில், மரதகத்தை, (கரு) வெஃகாவில், திருமாலை, பாட, கேட்டு, வளர்த்தனால் பயன்பெற்றேன், (உ0) வருக என்று, மடக்கிளியை, கைகூப்பி, வணங்கினாள். (உச)

உரை.—பாலஸூர்யனையொத்தவனாய், திருக்குறுங் குடியில் நித்யவாஸம்பண்ணுகிறமேகத்தை யொத்தவனாய், நித்யமான த்ரிவிதாத்மவர்கத்துக்கு மவ்வருகானவனாய், பரமபதத்திலே, (உபயவிபூதிக்கும்) காரணபூதனாய்க் கொண்டு, (ரு) எழுந்தருளியிருக்கிறவனாய், (ஸ்வரூபரூபகுணங்களால்) அளவிடக்கூடாதவனாய், அம்ருதக் கடல்போலே நிரதிசயபோக்யபூதனாய், கோயிலிலே, நித்யவாஸம் பண்ணுகிற, (க0) பரிசுத்தனாய், பரிசுத்தாருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய், விளக்கொளிபோலே நெஞ்சிலே ப்ரகாசிக்குமவனாய், திருத்தண்காவிலே, § மரதகம்போலே குளிர்ந்தவடிவையுடையனான பச்சைவண்ணராய், (கரு) திருவெஃகாவிலேகண்வளர்ந்தருளுகிற, ஸ்ரீயப்பதியான ஸர்வேஸ்வரனை, ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே பாட, (ப்ரீதியுடன்) கேட்டு, உன்னைவளர்த்ததனாலுண்டான ப்ரயோஜநத்தைப் பெற்றேன், (உ0) இங்கேவாவென்றழைத்து, லஜ்ஜா விஷ்டமான கிளியை, அஞ்சலிபண்ணி, அதின்காலிலும் விழுந்தாள். (உச) (கச)

வ்யா.—* பதினாலாம்பாட்டு. (முளைக்கதிரை) திருநாமம்ஸாத்மியாததசையும், ஸாதமிக்குமோவென்று ‡ சங்கிக்குந் தசையும்,ஸாத்மிக்கும் தசையுமாயிருக்கிறபடியையிறே இம்மூன்று பாட்டிலுஞ்சொல்லுகிறது. "ஆபத்ஸகங்களான திருநாமங்களைத் தான் ஆதிக்ரஹணம்பண்ணித்தந்து சொல்லச்சொல்லுகையாலேசொன்னோம், அது மோஹஹேதுவாயிற்று" என்றுபார்த்து, கிளி, தன்னுடைய விவேகததாலே முன்பு தெளிந்தகாலத்தில் † தான் உஜ்ஜீவித்தப்ரகாரத்திலே கற்பிதத திருநாமங்களை அடைவே சொல்லக்கேட்டுத் தரித்து,

* பதினாலாம்பாட்டு.—(முளைக்கதிரை) சங்கிக்குந்தசை - (நெஞ்சுருகி) என்கிறபாட்டு. (தான் உஜ்ஜீவித்த) - நாயகியான தான்தரித்த.

§ இது காஞ்சீநகரத்தில் வடவெல்லையிலிருக்கிற பச்சைவண்ணரென்று ப்ரஸித்தமான திவ்யதேச விஷயமென்பர்.

(வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக) என்று கிளியைக்கொண்டாடுகிறாள.

(முளைக்கதிரித்யாதி) அடியில் †அவற்றைக் கற்பித்த திருநாமங்களுடைய அடைவிருக்கிறபடி. (முளைக்கதிர்) என்னீர், (குறுங்குடியுள முகில்) என்னீர், என்றாயிற்றுக்கற்பித்தது. (முளைக்கதிர்) உதிக்கிற ஆதித்யனைப் போலே கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி யிருக்கிற திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையவன் (க) "𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌚𑌸𑌮𑍍-ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம்" என்னக்கடவதிறே. தம்மை, அடியிலே அவன் விஷயாந்தரங்களினின்று மீட்டதும், ஸ்வவிஷயத்திலே ருசியைப பிறப்பித்ததும் வடிவைக்காட்டி ஆகையாலே அத்தையாயிற்று இதுக்கு பரதமத்திலே யுபதேசித்தது. (உ)†"மணியுருவில் பூதமைந்தாய்" என்றன்றோ அடியிலே ஸ்வீகரித்த வடிவைச் சொல்லிற்று, இங்கு (முளைக்கதிரை) என்பானென்னென்னில்; வஸ்து §ததேஸ்யம் ப்ரயோஜகம், ப்ரகாசகத்வமாயிற்று ப்ரயோஜகம். ஆகையாலே தேஜோமயமான விக்ரஹமென்கை. (குறுங்குடி யுள் முகிலை) இவ்வடிவை சாஸ்த்ரமுகத்தாலுமன்று, ஆசார்யோபதேசததாலு மன்று, திருக்குறுங்குடியிலேயாயிற்று ப்ரகாசிப்பித்தது, இரண்டாம்பாட்டில், "முகிலுருவ" என்று - வடிவின் ஸ்ரமஹரதையையும் ஔதார்யத்தையும் பற்றவருளிச் செய்தார், அத்தை இங்கே சொல்லுகிறார் (குறுங்குடியுள் முகிலை) இன்ன பர்வதத்திலேமேகம்படிந்ததெனறால் வர்ஷம் தப்பாதென்றிருக்குமாபோலே திருக்குறுங் குடியிலே நின்றானென்று லோகமெல்லாம்க்ருதார்த்தமாம்படியாயாயிற்றிருப்பது. (உள் முகில்) வந்து வர்ஷித்துப்போம் மேகம்போலன்றிக்கே, ஸ்ததாயியாயிற்று மேகமாயிறறு இது.

திருக்குறுங்குடியில்வந்து நின்றருளின சீலாதிகளுடைய ஆப்பாடு சொல்லுகிறது மேல் (மூவாமூவுலகித்யாதி) மூவாமூவுலகமென்று - நித்யமான த்ரிவிதாத்மவர்க்கத்தை யருளிச்செய்கிறார். (கடந்து) ஸகலசேதநாசேதநங்களுககு மவ்வருகாயிருக்குமவன. (அப்பால்) பரமபததிலே.

(அவற்றைக் கற்பித்த) - அந்தக்கிளியைக் குறிததுக கற்பித்த. (முளைக்கதிர்) என்று முன்னே பரமபதநாதனை, (மணியுரு) என்று - நீலவர்ணனாகச் சொல்லி, இபபோது, (முளைக்கதிர்) என்று சிவப்பாகச் சொன்னால் கறுப்பு சிவப்புமான இரண்டுவிக்ரஹ விசிஷ்டமான வஸ்து விரண்டுண்டோவென்று சங்காபிப்ராயம்.

(க) (உ) க.

§ (பா) ஆசார்யோபதேசத்தாலுத்தேஸ்யம். (பா) பேதம்ப்ரயோஜகம்

(முதலாய்நின்ற) உபய விபூதிக்கும் ஸத்தாஹேதுவாய் நின்ற. நித்யஸூரிகளுக்கு போக்யதையாலே ஸத்தாஹேதுவாய் ஸம்ஸாரிகளுக்குக் கரணகளேபரப்ரதாநத்தாலே ஸத்தாஹேதுவா யிருக்குமென்கை.

(அளப்பரியஆரமுதை) ஸ்வரூபரூபகுணங்களால் அபரிச்சிந்நனாய் அம்ருதஸாகரம்போலே நிரதிசயபோக்ய பூதனா யிருக்குமவனை. (அரங்கம்மேயவந்தணனை) அந்த அம்ருதஸாகரத்தில் நின்றும் ஒருகுமிழி புறப்பட்டு ஒரு தடாகத்திலே வந்து தேங்கினாற்போலேயாயிற்று - கோயிலிலேவந்து கண்வளர்ந் தருளுகிறபடி. பெரியபெருமாளுக்கடி க்ஷீராப்தியன்றுகாணும், பரமபதமாயிற்று. (க) "அண்டர்கோனணியரங்கன்" என்னக்கடவதிறே. (அரங்கம்மேயு) பரமபதத்திலிருப்பு † பேருகைக்கு யோக்யதையுண்டு, அவதாரங்கள் தீர்த்தம் ப்ரஸாதிக்கயோக்யதையுண்டு, ஸமஸாரம் கிழங்கெடுத்தாலல்லது கிளம்பபோமென்றுகிடக்கிற கிடையிறே. கல்பாவஸாநத்திலும் விஷயமில்லாமையாலே போகிறவித்தனை. (அந்தணனை) தன்வடிவழகைக்காட்டி அஹங்காரமும் விஷயாந்தர ப்ராவண்யமுமாகிற அசுத்தியைப்போக்கும்படியான சுததியையுடைய

(அந்தணர்தஞ்சிந்தையானை) சுத்தரானவருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனை. ‡கோயில்வாஸமும் ராகாதிதூஷிதனன்றியே யிருப்பானொருசுத்தனுடைய ஹ்ருதயத்தைக் கணிசித்திறே (உ)"அன்று வெஃகணைக்கிடந்தது என்னிலாதமுன்னெலாம்" என்னக்கடவதிறே. (விளக்கொளியை) தன்வடிவழகைக்காட்டி அஹங்காரத்தையும் விஷயாந்தர ப்ராவண்யத்தையும் போக்கிவிடுகையன்றியே நெஞ்சிலே புகுந்து முறையுணர்த்தினவனை. (விளக்கொளியை) ப்ரகாசகனானவனை. அதாகிறது - ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களையும், தத்விரோதி ஸ்வரூபத்தையும், விரோதிநிவ்ருத்திபூர்வகமாகப் புருஷார்த்தம் ஸித்திக்கும்படியான உபாய ஸ்வரூபத்தையும் ப்ரகாசிப்பிக்கை.

[illegible] மரதகத்தை) "அருமணவனை"; என்னுமாபோலே (திருத்தண்காவில் மரதகம்) என்கிறார். இன்னதீவிலே

† பேருகை - சலிக்கையாய் - அவதரிக்கைக்கு யோக்யதை யுண்டென்றபடி.

‡ கோயிலே யநுபவிக்கிறவர் ஆஸ்ரித விஷயத்தி லிருப்பைச் சொல்லுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (கோயில்வாஸமுமித்யாதி).

அருமணவன் - த்வீபவிசேஷம். விளக்கொளி யெம்பெருமான் - பூர்வம் கண் வளர்ந்தவிக்ரஹம்.

(க) அமல-கO-　　　(உ) தி-ச-வி:கூச.

பட்டவானே யென்றால் விலக்ஷணமாயிருக்குமாபோலே திருத்தண்காவில் கண்வளர்ந்தருளுகிறவனுடைய வடிவென்றால் விலக்ஷணமாயிருக்கிறபடி. (க) "பச்சைமாமலைபோல்மேனி" என்கிற வடிவையுடையவன். † வடதேசத்திநின்றும் பெருமாளையநுபவிக்க வருமவர்கள் இளைத்துவிழுந்தவிடத்திலே அவர்களை எதிர்கொண்டு அநுபவிப்பிக்கக் கிடக்கிறகிடை.

(வெஃகாவில்திருமாலை) (திருத்தண்காவில் - மரதகம்) என்று வடிவிலே மினுக்கமுண்டானாற்போலேயாயிற்றுத் திருவெஃகாவிலே வந்து கண்வளர்ந்தருளின பின்பு ஶ்ரியஃபதித்வம்நிறம்பெற்றபடி. (உ) "வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தா யென்று வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தேயென்னும்" பிராட்டியைத் திருமணம்புணர்ந்த மணக்கோலத்தோடேகூட இருவரும்வந்து கிட்டின கிடையாக வருளிச்செய்தாரிறே - கிமே; ஆஶ்ரயணவேளையோடே போகவேளையோடுவாசியற ஒருமிதுநமாக ஆஶ்ரயமாயிற்றிருப்பது. (பாட) திருநாமம் ஸாத்மிததபடியாலே அவகாசத்திலே பிரசித்தரிக்கப்பெற்றோமென்கிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலேசொல்ல. (கேட்டு) ப்ரீதிப்ரேரிதையாய்க் கொண்டு கேட்டு. (சொல்லே என்று சோர்கின்றாள்) என்று - முன்பு திருநாமஞ் சொன்னவிடத்தில் கேட்பாரைப்பெற்றதில்லை; இப்போது ஸாத்ம்ய மாகையாலே கேட்பாரைப்பெற்றதென்கிறாள்; (௩) "செல்வன் நாரணனென்ற சொல்கேட்டலும்" என்னுமாபோலே.

(வளர்த்ததனால் பயன் பெற்றேன்) இது சொன்ன திருநாமம் தனக்குதாரகமாயிருக்கையாலே உன்னை வளர்த்தப்ரயோஜநம் பெற்றேனென்கிறாள். ஆபத்ஸகனானவன் ஆபத்தை விளைத்துப்போனவத்தசையிலும் நீ ஆபதஸ்கமாகப் பெற்றேனென்கிறாள. (வருக என்று - †முன்கை முப்பதின்காதமா யிருக்கிறபடி. (மடக்கிளியை) லஜ்ஜாவிஷ்டமான கிளியென்னுதல்; பவ்யமான கிளியென்னுதல்

மரதகம் போல் வடிவையுடையார் அஙருக்கண்வளரவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (வடதேசத்திநின்றுமித்யாதி).

போக வேளையிலும் ஶ்ரியஃபதித்வம் சொல்லவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆஶ்ரயணவேளையோடித்யாதி). இங்கேப்ரீதியோடே சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (சொல்லேயென்று - சோர்கின்றாளித்யாதி). ஸாத்ம்யமான - கடகையானபிராட்டியைச்சொல்லுகிறது பிராட்டிசேர்த்தியானால் கேட்கலாயிருக்குமென்னுமத்தை யருளிச்செய்கிறார் (செல்வன் நாரணனித்யாதி). கிட்டவிருக்கிறத்தை, (வருக) என்னென்னென்ன; அருளிச்செய்கிறார், (முன்கையித்யாதி).

(க). தி-மா-உ-
(௩) தி-வாய்-க-க0-அ.
(உ) கௗ-

(வளர்த்ததனால் பயன்பெற்றேன்) என்று - தன்னோட்டை ஸம்பந்தத்தை ஔபாதிகமாக்குவதே! என்றும், சேஷபூதரான நாம் ஸ்வரூபப்ராப்தமான கிஞ்சித்காரத்தைப்பண்ண உபகாரங் § கொண்டாரைப்போலே சொல்லுவதே! என்றும் லஜ்ஜாவிஷ்டமாயிருந்தது; †சேஷபூதன் ஸ்வரூபப்ராப்தமான கிஞ்சித்காரத்தைப் பண்ண, (க) "ধর্মতঃ পরিরক্ষিতঃ- தர்மதஃபரிரக்ஷிதஃ" என்றுனிறே †சேஷி. பவ்யதையானபோது இவள்கொண்டாடப்புக்கவாறே தன்னுடைய சேஷத்வந்தோற்ற, (உ) "নিভৃতপ্রণতপ্রহ্বঃ-நிப்ருதஃ ப்ரணதஃ ப்ரஹ்வஃ" என்கிறபடியே ஒதுங்கின படியைச் சொல்லு

(கைகூப்பிவணங்கினாள்) அந்தஉபகாரஸ்ம்ருதியானது அவ்வளவில்பர்யவஸியாமையாலே அஞ்சலியைப்பண்ணினாள். இது லஜ்ஜை தன்னையுங்கைவிட்டது. அதுக்குஹேதுவென்னென்னில்; வாத்ஸல்யத்தாலே செய்ததுக்கு வழக்குப் பேசக்கடவோமோவென்னும் நினைவாலே. (வணங்கினாளே) அஞ்சலி ஸாத்மித்ததிறே யென்னுக் காலிலே விழுந்தாள். † உடையவர், முதலிகளும் தாமுமாக நீராட வெழுந்தருளுகிறபோதை ஸமூஹத்தைக்கண்டு ப்ரீதியாலே பெரிய நம்பி தெண்டனிட, "விநயம்பாவிப்போமாகில் தண்டனை ஸ்வீகரித்தோமாவுதோம்" என்று பேசாதே யெழுந்தருளினாரிறே. (கச)

மூ.—கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சிமேய
களிறென்றுங்கடல்கிடந்தகனியேயென்றும்
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி
அணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும்
சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித்
தூமுறுவல்நகையிறையேதோன்றநக்கு
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவியாங்கே
மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. (கரு)

பதம்.—கல், உயர்ந்த, நெடு, மதின், சூழ், (ரு) கச்சி, மேய, களிறுஎன்றும், கடல், கிடந்த, (க0) கனியேயென்றும், அல்லி, அம், பூ, மலர், (கரு) பொய்கை, பழனம், வேலி, அணி, அழுந்தூர், (உ0) நின்று, உகந்த, அம்மான் என்றும், சொல்உயர்ந்த, நெடு, (உரு) வீணை, முலைமேல், தாங்கி, தூமுறுவல், நகை, (ங0) இறையே, தோன்ற, நக்கு, மெல்விரல்கள், சிவப்பெய்தத்தடவி; (ஙரு) ஆங்கே, எனபேதை, மென்கிளி போல், மிகமிழற்றும். (ஙக)

கிஞ்சித்காரத்தை உபகாரமாகக் கொண்ட விடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (சேஷபூதனித்யாதி). திருவடியைப் பெருமாள் சொன்னார்,
வாத்ஸல்யத்துக்கு வழக்குண்டோவென்றிருந்த பேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (உடையவரித்யாதி). .. ... (சச)

§ (பா) கொண்டாரப்போலே.
(க) ரா-கி. (உ) ரா-கி.

உரை.—கல்லாலே செய்யப்பட்டதாய், உயர்த்தியையும், விஸ்தாரத்தையுமுடைத்தான, மதிளாலே சூழப்பட்ட, (௫) கச்சிநகரில் (திருப்பாடகத்திலே), பொருந்தி வர்த்திக்கிற, யானையென்றும், திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற, (௧௦) கனிபோலே போக்யபூதனானவனே! என்றும், மிக்கு, பரிமளத்தை யுடைத்தாய், தர்சநீயமா யிருந்துள்ள, புஷ்பங்களையுடைத்தான, (௧௫) தடாகங்களையும், நீர்நிலங்களையும், வேலியாகவுடைய அழகிய, திருவழுந்தூரிலே, (௨௦) ஆஸ்ரிதர்க்காக நின்றருளி, (அவர்களை ரக்ஷி)ரயிப்பதற்கு) உகந்த ஸ்வாமீ! என்றும் (சொல்லி), நாதம்மிகவிருப்புள்ள இசைநீண்டிருந்துள்ள, (௨௫) வீணையைத், தன்ஸ்தநங்களிலே தரித்துக்கொண்டு, பரிசுத்தமான (மந்த)ஹாஸத்தாலே, பற்களின்வரிசை, (௩௦) அவ்வருகு ப்ரகாசிக்கும்படி, சிரித்து, (தன்னுடைய) மெல்லிய விரல்களானவை, சிவக்கும்படியாக (அவ்வீணையை)த்தடவி, (௩௫) அதுக்குமேலே, என்பெண்ணானவள், கிளிப்பிள்ளைபோலே, பலபடியாகப்பாடாநின்றாள். (௩௧)

வ்யா. — பதினஞ்சாம்பாட்டு. (கல்லுயர்ந்த) கீழ்ப்பாட்டிலே - கிளி, திருநாமத்தைச் சொல்லக்கேட்டு ஆழ்வஸ்தையில் அதின்பக்கலிலே உபகாரஸ்ம்ருதியும் கொண்டாடினாளாய்நின்றாள். இதில் - அததசைபோய்த் தன்வாயாலே திருநாமத்தைச் சொல்லி அது தன்னை வீணையிலேயேறிட்டு † நுணுக்கினாள், அந்த வீணையோட்டை ஸ்பர்சம் ப்ரத்யபிஜ்ஞா ப்ரத்யக்ஷத்தாலே ஸம்ஶ்லேஷதசையில் தன்படிகளையும் அவன்படிகளையும் வீணையிலேயேறிட்டுவாசிக்கும்படிக்கு ஸ்மாரகமாக, அந்த வீணைமுகத்தாலே அவன்வடிவை ஸாக்ஷாத்கரித்து, அந்த வீணையை அவனாகக்கொண்டு அவனோட்டை ஸம்ஶ்லேஷதசையில் பண்ணும் வ்யாபார விசேஷங்களை இவ்வீணையிலே பண்ணாநின்றாள், இவள் உணர்ந்தால் என்னாய்விழப் புகுகிறதோவென்று இன்னாதாகிறாள்.

(கல்லுயர்ந்தவித்யாதி) திருநாமந்தான் ஆபத்ஸகமாயும் உஜ்ஜீவநஹேதுவாயும் போக்யமாயுமிறேயிருப்பது. அதில் அவையிரண்டும் கீழேசொல்லி போக்யமான திருநாமங்களை இங்கேசொல்லுகிறாள். (கல்லித்யாதி) உள்ளுகிற்கிற ஆனையினுடைய ஶ்லாக்யதையெல்லாம் மதிளிலே தோற்றுகிறபடி. †ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்கள் அப்ரயோஜகம், விஷயத்துக்குப் பரியுமதுவே ப்ரயோஜகம்; மேன்மையான வஸ்துவுக்கு அநுவ்ருததாகாரம் சேஷியை அதிசயிப்பிக்குமிறே. கல்லாலே செய்யப்பட்டு ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமான ஓக்கத்தையுடைத்தாய் ஆனைக்கு ஸ்வைரஸஞ்சாரம்பண்ணலாம்படி

---

பதினஞ்சாம்பாட்டு.—(கல்லுயர்ந்த) நுணுக்குகை - வீணையிலே யிட்டு வாசிக்கை; ஆலாபித்தாளென்றபடி.

விஶ்லேஷதசையிலே பரியக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்க ளித்யாதி).

படியான விஸ்தாரத்தையுமுடைத்தான மதிளென்கை. (கச்சிமேய களிறு) என்கிறது - திருப்பாடகத்து நாயனாரை. நித்ய ஸ்ப்ருஹணீயமாகவிருக்கையாலும் நிவாரகரில்லாத ஸ்வாதந்த்ர்யத்தாலும் ஒரு மதஹஸ்திபடிந்தாற்போலேயாயிற்று எழுந்தருளியிருப்பது. †சேனை முதலியார் பெரியதிருவடி இவர்களுடைய நியமநமும் ஸ்வச்சந்தாநுவ்ருத்திகளாய்க்கொண்டு நியமிக்கிறார்களாகையாலே கிஞ்சித்காரத்திலே ஒருமுகபேதமாயித்தனையொழிய சேஷிகளாய்க்கொண்டு நியமிக்கிறார்களன்றிறே. ஸர்வஸ்ப்ருஹணீயனாயிருக்கிறவன் கிடீர் தன்பக்கலிலே ஸ்ப்ருஹைபண்ணினவெனக்கு முகங்காட்டாதொழிகிறான். செய்ததுக்கு நிவாரகரில்லாத ஸ்வதந்த்ரன்கிடீர் எனக்கு முகங்காட்டாதொழிகிறான்.

(கடல்கிடந்த கனியேயென்றும்) இவ்வானைபட்ட ஆகரத்தைச்சொல்லுகிறது. ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமான க்ஷீராப்தியிலே பக்வபலம்போலே கண்வளர்ந்தருளுகிற நிரதிசயபோக்யபூதனே! கனியானது கண்டபோதே நுகரலாயிருக்கையும், புஜிப்பாரைப் பெறாதபோது தான் அழியும்படியுமாயிற்ற யிருப்பது; அப்படியே, தன்னை அநுபவிப்பார் தேட்டமாய் அவர்களைப் பெறாதபோது தான் அழியும்படியாயிருக்கை. போக்தாக்களைக்குறித்து அவஸரப்ரதீக்ஷனா யிருக்கிறவன் எனக்கு முகங்காட்டாதொழிவதே!. போக்தாக்களைபெறாதபோது அழியும்படியாயிருக்கிறவன் தன்னைப்பெறாதபோது முடியும்படியாயிருக்கிற வெனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(அல்லியம்பூ இத்யாதி) அவ்வானை ஸ்வைரஸஞ்சாரம் பண்ணிவந்து நிற்கிற தேசத்தைச் சொல்லுகிறாள். †தாதுமிக்குப் †பரிமளிதமாய் தர்சநீயமாயிருந்துள்ள புஷ்பங்களை யுடைத்தான தடாகங்களையும் நீர் நிலங்களையும் வேலியாக வுடையதேசம். ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமாய் அநுகூலர்க்கு ஶ்ரமஹரமாயிருந்துள்ள தேசமென்கை. (நின்றுகந்த)ஸம்ஸாரிகளுக்கு ஆஶ்ரயணார்த்தமாகநின்று, அவர்கள் தன் நிலையழகையும் அதுக்கடியான குணங்களையு மநுஸந்தித்துத் திருவடிகளைக் கிட்டினால் உகப்பானுந்தானே யாயிருக்கை. † ப்ராபகனும் தானாய் ப்ராப்தியில் உகப்பானும் தானாயிருக்கை.

---

சேனைமுதலியார்பிரம்பின்கீழிலும் பெரியதிருவடிமுதுகிலும் வளராநிற்க நிவாரகரில்லை யென்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (சேனைமுதலியாரித்யாதி).

அல்லி - தாது. (அம்) என்றத்தாலே - பரிமளம். (நின்று) என்கையாலே - ப்ராபகம்.

ஆதமலாபம் ஈஶ்வரனதிறே. (நின்றுகந்த) நிற்கிறநிலை யதி வாறே உகந்தபடி. அதுக்குஹேதுவென்னென்னில்; (அம்மாறு நும்) உடையவனுகையாலே உடைமையை லபிக்கைக்கு யத்நம்பண் வானும்தானுய் உகப்பானும் தானுயிறே யிருப்பது. † சேஷிக்கு ஷிதவஸிததியும் திருப்பதிகளிலே, சேஷபூதனுக்கு சேஷத்வ யும் திருப்பதிகளிலே யென்றுயிற்று இவரிருப்பது. (க) "நின்றது தையூரகத் திருந்த தெந்தைபாடகத் தன்றுவெஃகணைக்கிடந்தது னிலாத முன்னெலாம்" என்று - திருமழிசைபபிரான் அநுபவி படியை இம்மூன்றுஸ்தலததிலும் அநுபவிக்கிருள் இவள்.

(சொல்லுயர்ந்தநெடுவீணை) § ஸாமாந்யமானயாழிலும் இது லுங் காட்டில் நாதம்மிக்கிருக்கையும் இசைநீண்டிருக்கையும். இசை நீண்டிருக்கையாவது-அக்ஷரம் † நரம்பில்லாதபடி கரைந்து இசை யேயாயிருக்கை; அதவா (நெடுவீணை) கேட்டார்க்கு "அது, அது" என்று கிடக்கும்படியா யிருக்கையென்னுதல். (வீணைமுலை தாங்கி) வீணையை ஸ்பர்சிததவாறே காந்தனானவன் ஸம்ஶ்லே தசையில் தன்னுடைய போகயதையையும் இவளுடைய போக தையையும் வீணையிலே யேறிட்டு வாசிக்கும்படியை ஸாக்ஷாத் த்து, அத்தைத் தடவுங்கையை ஸாக்ஷாதகரித்து, அதுக்கு ஆஶ்ர மானதோளை ஸாக்ஷாத்கரித்து, அதுககாஶ்ரயமான வடிவை ஸா க்ஷாத்கரித்து, அவனை ஸம்ஶ்லேஷதசையிலே தன்மார்பிலே யேறிட டுக்கொள்ளுமாபோலே வீணையைமார்பிலேயேறிட்டுக்கொண்டு இவ்வீணையை அவனுகநினைக்கக்கூடுமோவென்னில்; (உ) "గృ హీత్వా ప్రేక్షమాణా సా భర్తుః కరవిభూషణమ్ । భర్తారమివసంప్రా జానకీముదితాభవత్ -க்ருஹீத்வாபரேக்ஷமாணுஸா பர்தருக்கரவிபூ ணம் । பர்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத்" என்று பிராட்டி, பெருமாளை ப்ரதயபிஜ்ஞா பரதயக்ஷரூபததாலே அநுப வித்தாளிறே. [గృహీత్వా- க்ருஹீத்வா] தேசாந்தரம்போன துக்களைக்கண்டாற்போலே மேல்விழுந்தாள். [ప్రేక్షమాణా-ப்ரேக்ஷ மாணு] வைத்தகண்மாறுதே பார்த்துக்கொண்டிருந்தாள். (ஸா) இவன் வரவை ராவணன் வரவாக சங்கிததவள்கிடீர் இப்படி மேல்விழுந்தாளென்கிருன். [భర్తుః కరవిభూషణమ్- பர்தருக்கர

இங்கே வந்தோ அம்மானுயிற்றது, அங்கில்லையோவென்ன; அருளிச் செய்கிருர் (சேஷிக்கித்யாதி).

(நரம்பில்லாத) - தோற்றுதபடி.

---

§ (பா) ஸஜாதீயமான. (க) திருச்சந்தவி-கூ௪. (உ) ரா-ஸு-௩௬-௪

ஷணம்] அடியில் தன்னைக் கைப்பிடிக்கிறபோது தன்கையில்‡உறுத்தின மோதிரத்தை, அங்ஙனன்றியே, தானும் அவரும் ஸம்ச்லேஷிக்கும்போது போகத்தின்மிகுதியாலே ப்ரணயரோஷந்தலையெடுத்து ஒருவரையொருவர் முகம்பாராதே யூடியிருப்பார்கள், அப்போது இருவரையுஞ்சேர்த்த மோதிரமென்னுதல். அதாவது - அப்போது நேர்முகம் பார்க்கையும் வார்த்தைசொல்லுகையும் இருவர்க்கும் அபேக்ஷிதமாயிருக்கும்; வேறுசோப்பாரில்லையாகையாலே கையில் திருவாழிமோதிரத்தைக் கழற்றிப் பெருமாள் தரையிலே விழவிடுவர், அப்போது தான் "அம்மோதிரத்தை விழவிட்டீர் காணும்" என்னும் வார்த்தையை யுண்டாக்கின மோதிரமாகையாலே கடகமானமோதிரமென்கிறது. [భర్తారమివ సంప్రాప్తా- பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா] திருவாழிமோதிரத்தைக் கண்டவாறே பெருமாள் கையை நினைத்தாள், அதுக்காச்ரயமான தோளையும் அதுக்காச்ரயமான வடிவையும் நினைத்தாள், ஸந்நிதியில் அவரைத் தழுவிக்கொள்ளுமாபோலே திருவாழிமோதிரத்தைத் தழுவிக்கொண்டாள். [భర్తారమివ- பர்த்தாரமிவ] அவன் பெருமாளாகவே தழுவிக்கொண்டாள், இவன் பர்த்தாவைப்போலே யென்கிறான். [జానకీ ముదితాభవత్ - ஜாநகீமுதிதாபவத்] ஸ்ரீஜநகராஜன் திருமகள் உகவாநின்றாள், † உதர்க்கத்தில் என்னாய்விழப்புகுகிறதோ வென்று பீதனாகிறான்ருஷி. தாங்கிவைத்தென்னாதே (தாங்கி) என்கிறது, ஸம்போகதசையில் (க) "అపూర్వవద్విస్మయమాదధానయా-அபூர்வவத் விஸ்மயமாததாநயா" என்கிறபடியே தன்போக்யதையாலே குமிழ்நீருண்டு தளர்ந்த தசையிலே அவனைத் தன்கையாலே யெடுத்தணைத்துக்கொள்ளும்படி ஸ்ம்ருதிவிஷயமாய் அவனுகநினைத்து வீணையையெடுத்து முலையிலே தாங்கினபடி.

(தூமுறுவல்) அவனை ஸ்பர்சிக்கையால்வந்த ஹர்ஷத்தாலும், எதிர்த்தலையைத் தோற்பிக்கையால வந்த ஹர்ஷத்தாலும் ஸ்மிதம் பண்ணினபடி. (நகைஇறையேதோன்றநக்கு) தந்தபங்க்தி அல்பமே ப்ரகாசிக்கும்படி சிரித்து. † அந்த ஹர்ஷம் ஸ்மிதத்தளவில் பர்யவஸியாதபடியாலே இளநிலாப்பாய்ந்தாற்போலே யிருக்கும்படியாக வாய்விட்டு ஹாஸம்பண்ணினபடி.(உ) "కాన్తస్మితా లక్ష్మణజాతహాసా- காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா" என்னக்கடவதிறே.

---

(உதர்க்கத்தில்) - முடிவில்; உணர்ந்துணரிலென்றபடி.

(தூமுறுவல்) என்று - ஸ்மிதஞ்சொல்லியிருக்கத் திரியவும் (நக்கு) என்று சிரிப்பைச்சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (அந்தஹர்ஷமித்யாதி).

---

‡ (பா) உறைத்திருக்கும். (க) ஸ்தோ-ர். (உ) ரா-ஆர-௬௩-௧௨.

(மெல்விரல்கள் சிவப்பெய்தத்தடவி) † ஸம்ஶ்லேஷத்தைச் ... காந்தன் முதுகிலே தான் படுத்தும் போகசிஹ்நங்களை ... நாணியைத்தடவினபடி. (மெல்விரல்கள்) அதிஸுகுமாரமான ... கிடீரென்கிறாள். (சிவப்பெய்தத்தடவி) ஸம்போகத்தைப்பிலே ... ர்த்தம் ஸஹ்யமாயிறே யிருப்பது; † (சிவப்பெய்த) என்கையாலே ... ததகாலீநமான சிவப்பென்கை.

(ஆங்கே) அதுக்குமேலென்னுதல்; அத்தசையிலென்னுதல். (மென்கிளிபோல் மிகமிழற்றும்) முக்தமான கிளிபோலே மிக ... றாநின்றாள். † கிளியின்வாயிலும் திருநாமத்தைக்கேட்டவளாகை யாலே அதிற்காட்டில் தன் மகளுக்குண்டான மார்த்தவத்தையும் மௌக்த்யத்தையுஞ் சொல்லுகிறாள். (மிகமிழற்றும்) பருவமிது வாயிருக்க ப்ரணயத்தில்தேசிகையானபடி பேச்சுக்கு நிலமன்றென் கிறாள். எதிர்த்தலையில் அபஜயத்தைக்கண்டு சிரித்து (க) "த்வம் ஸ்த்ரீ...-த்வாமாஹுஸ்தாபஹு வாக்யஜாதம்" என் கிறபடியே நாங்கள ஸ்த்ரீகளன்றோ, அபலைகளன்றோ, நீர் ஆண் பிள்ளையன்றோ' என்று இப்புடைகளிலேசொல்லுகிற வார்த்தை களுக்குத் தொகையில்லையென்கிறாள். (உ) † "ந ...ஸ்ய... -நைவமாகிஞ்சிதப்ரவீத்" என்று - † அவன் வார்த்தைகேட்கையிலே வாய்சீறும்படி கம்பீரையாயிருக்கக்கடவ தான் அந்த போகத் தாலே காம்பீர்யம் குலைந்து தன்வெற்றிதோற்ற விஜயத்தையாக நின்று வார்த்தைசொல்லுகிறாளிறே.

(என்பேதையே) என்வயிற்றிற் பிறந்த சிறுபெண், இவை யெல்லாமெங்கேகற்றாள். இப்பருவத்தில் ப்ரணயத்தில் வைதக்த்ய மெல்லாமெங்கேகற்றாள். பருவமும காலமுமென்று ஒன்றில் ... யாகாதே, படுத்துமவன்கையதாகாதே!. † சிறியவயிற்றிலே பெரிய ஜகத்தையடக்கின அகடிதகடநம்போலன்றியே அணுபூதன்பக்கல் விபுவானதான் ஸமாப்யவ்யாபித்த அகடிதகடநம் போலன்றியே

சிவப்புண்டாமபடி தடவஸஹிக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷத்தையிலேயித்யாதி). ஸ்வபாவாதன்னிலே விரல்சிவந்தன்றோ விருப்பதென்ன; அருளிச்செய்கிறார் (சிவப்பெய்தவித்யாதி). (கிளிபோல்) என் னுநிற்க, (மிக) எனப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (கிளியின்வாயிலு மித்யாதி). (மிகமிழற்றும) கிளியைப் பற்றவும நன்றாக வென்னுதல்; அமே வார்த்தைகளென்றபடி. பஹுவார்த்தை சொன்னளென்கைக்கு முன்பிருக் கும்படி தானென்னென்ன; அருளிச்செய்கிறார் (நைவமாகிஞ்சித்யாதி). (அவன் ஸமஸ்த ... வடதளசாயி" இத்யாதிகளைப் பற்ற விது ஆஶ்சர்யமோவெ ன்ன; அருளிச்செய்கிறார் (சிறியவயிற்றிலே பெரியவித்யாதி). ...

(க) ரா-யு-கக-கஉ. (உ) ரா-அயோ-குஅ-நகு.

இதொரு அகடிதகடநமிருந்தபடியே! யென்கிறாள். (மென்கிளி-என்பேதையே) மௌக்த்யவைதக்த்யங்களிரண்டும் ஏகாஶ்ரயத்தில் கிடப்பதே!. ... ... ... ... ... (கரு)

மூ.—கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும்
கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும்
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும்
வடதிருவேங்கடம்மேயமைந்தாவென்றும்
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும்
விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும்
துன்றுகுழல்கருநிறத்தென்துணையேயென்றும்
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கசு)

பதம்.—கன்று, மேய்த்து, இனிதுஉகந்த, காளாய் என்றும், கடி, (ரு) பொழில், சூழ், கணபுரத்து, என்கனியேஎன்றும், மன்றுஅமர, (க0) கூத்தாடி மகிழ்ந்தாய் என்றும், வடதிருவேங்கடம் மேய, மைந்தாஎன்றும், அசுரர் வென்று, குலம்களைந்த, (கரு) வேந்தேஎன்றும, விரி, பொழில், சூழ், திருநறையூர், (உ0) நின்றாய்என்றும், துன்று, குழல், கருநிறத்து, என்துணையேயென்றும், (உரு) துணைமுலை மேல், துளி, சோர, சோர்கின்றாள். (உக)

உரை.—கன்றுகளை, ரக்ஷித்து, மிகவும் ஸந்துஷ்டனாய், காளைபோலேசெருக்குத்தோற்ற வர்த்திக்கிறவனே! என்றும், பரிமளம் மிக்கிருக்கின்ற, (ரு) சோலையாலே, சூழப்பட்ட, திருக்கண்ணபுரத்திலே, எனக்கு பக்வபலம் போலே போக்யபூதனானவனே! என்றும், நாற்சந்தியிலே பொருந்துமபடி, (க0) நர்த்தநம்பண்ணி மகிழ்ந்தவனே! என்றும், வடக்குத் திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற, மிடுக்கனே! என்றும், (காதுஷ்டனை) அஸுரர்களைஜயித்து, (அக்)குலத்தை நிர்மூலமாக்கின, (கரு) சக்ரவர்த்தித் திருமகனே! என்றும், விஸ்த்ருதமான, பொழிலாலே, சூழப்பட்ட, திருநறையூரிலே, (உ0) நின்றருளினவனே! என்றும், மிகவும்நெருங்கின, குழலையும், கறுத்ததிருமேனியையுமுடையனாய், எனக்குத துணையானவனே! என்றும் சொல்லி, (உரு) ஒன்றுக்கொன்று ஒப்பானஸ்தநங்களிலே, கண்ணீர்த்துளிகள், அருவிபோலேபாயும்படி, தளராநின்றாள். (உக) (கசு)

வ்யா.—பதினாறும்பாட்டு. (கன்றுமேய்த்து) "மென்கிளிபோல் மிகமிழற்றும்" என்று-ஸம்ஶ்லேஷதசையில தன்னுடைய ஜயமும் அவனுடைய அபஜயமும் தோற்றமேலிட்டு வார்த்தைசொன்ன விடத்தில் அவனும் அப்படியே மேலிட்டு வார்த்தை சொல்லக்கேட்டிலள், அத்தாலே நின்றநிலைகுலைந்து தன்கர்வமும் தானும வீணையுமாய்விட்டது, கூப்பிடத்தொடங்கினாள், (க) "भर्तारमनसंप्राप्ता

(க) ரா-ஸு-கக-ச.

ஜாநகீமுதிதாபவத் - பர்த்தாரம் பரிஷ்வஜ்ய முதிதாபவத்"

என்று உகந்தவனந்தரம், (க) "ஹாராம ஹா ஸலக்ஷ்மண ஹா ஸுமித்ரே-ஹாராம

ஹாலக்ஷ்மண ஹா ஸுமித்ரே" என்று - பிராட்டி கூப்பிட்டாற்போ

லே. "ஹாராம" என்று - போக்யவஸ்துவை நினையா, "ஹா லக்ஷ்ம-

ஹாலக்ஷ்மண" என்று - புஜிப்பாரை நினையா, "ஹா ஸுமித்ரே-ஹாஸு

மித்ரே" என்று - நிமித்தபூதரை நினையாக் கூப்பிட்டாளிறே. அப்

படியே வரையாதே ரக்ஷிக்கும்படியையும் முகங்கொடுக்கும்படி

யையும் சொல்லிக் கூப்பிடுகிறாளென்கிறாள்.

(கன்றுமேய்த்து) ப்ரதமத்திலே வரையாதே ரக்ஷித்தபடி யைச் சொல்லுகிறது. (கன்றுமேய்ததித்யாதி) "ஸர்வரக்ஷகனை நீ ரக்ஷணத்தில் நின்றும் கைவாங்கினையோ?" என்கிறாள் மேய்க்கை - ரக்ஷிக்கை. 'நித்யஸூரிகளை ரக்ஷித்தவளவாய் ஆறியிருக்கிறேனோ? ஸநகாதிகளையும் காதாசித்கமாக ரக்ஷித்தவளவாய் ஆறியிருக்கிறே _; ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே வந்தவதரித்து இடக்கையும் வலக் கையுமறியாத இடையரை ரக்ஷித்தவளவாயாறியிருக்கிறேனோ? அறிவுகேட்டுக்கு மேலெல்லையான கன்றுகளை மேய்த்தவுன்னை விட்டு எங்ஙனே யாறியிருப்பேன்?

(கன்றுமேய்த்தினிதுகந்த) †நித்யஸூரிகளை ரக்ஷிக்கை தட்டியி லிருப்பாய், கன்றுமேய்த்தபின்பு காணும் ஸார்வபௌமனாயிற்று. †ஸர்வரக்ஷகத்வம்புஷ்கலமாயிற்றது-கன்றுமேய்த்தபின்பிறே. (இனி துகந்த) (உ) "திவத்திலும் பசுநிரைமேய்ப் புவத்தி" என்கிறபடியே- பசுக்களைமேய்த்து உகக்கும்; கன்றுமேய்த்து இனிதுகக்கும். அவற் றுக்கு ரக்ஷகனபக்கல் "ரக்ஷகன்" என்கிறஜ்ஞாநமுண்டு; இவற்று க்கு அதுவுமில்லையிறே. அஜ்ஞாநத்துக்குமேலெல்லையான கன்று களையு மகப்பட ரக்ஷித்த நீ உன்வாஸியை யறிந்து உன்னையொழியச் செல்லாதவென்னை ரக்ஷியாதொழிவதே! யென்கிறாள். நானும் இவ் வாற்றாமையை விட்டு அஜ்ஞர் கோடியிலே அந்தர்ப்பவிக்கப்பெற றிலேன்.

(காளாயென்றும்) † தான்சோகாவிஷ்டையா யிருக்கச்செய்தே யும் தன்னை வடிம்பிடும்பருவத்தில் தோற்றுச் சொல்லுகிறாள்.

---

பதினாறும்பாட்டு —(கன்றுமேய்த்து) காளை-மேனாணிப்பாய், அத்தால்- ராஜாவாதல்; யுவாவாதல். முந்தினதை யருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளை ரக்ஷிக்கையித்யாதி). அங்கு ஸார்வபௌமத்வமில்லையோவென்ன; அருளிச் செய்கிறார் (ஸர்வரக்ஷகத்வமித்யாதி).

இரண்டாமர்த்தத்தை யருளிச்செய்கிறார் (தான்சோகாவிஷ்டையயித் யாதி).

---

(க) ரா-ஸு-உஅ-அ. (உ) தி-வாய்-கம-ரு-கம.

(௧) † "తరుణౌ రూపసమ్పన్నౌ - தருணௌ ரூபஸம்பந்நௌ என்று - நினைந்தின்னிளையுமகப்பட ஆழங்கால் படுத்தும்பருவம் இவனுக்கிடுமோ? அவனோடேகலந்து தான் இளகிப்பதிக்க ஆசைப்படுகிறாள்காணும். அதவா, † ரஸாயநஸேவைபண்ணினாரைப்போலே கன்றுகளை ரக்ஷித்தபின்பு வடிவு இளகிப்பதித்தபடி. மநுஷ்யர் அந்நமயஸ்வரூபரா யிருக்கையாலே அந்நமே வ்ருத்திஹேதுவாமாபோலே ரக்ஷகனுக்கு ரக்ஷணதர்மமேயிறே இளகிப்பதிக்கைக்குஹேது.

(கடிபொழிலித்யாதி) அவ்வவகாலத்திற்பிற்பட்டாரையும் ரக்ஷிக்கவன்றோ திருக்கண்ணபுரத்திலேவந்து போக்யபூதனாய் நின்றருளிற்று; இது பூர்வர்கள் நிர்வாஹம். "பசுக்கள் கைகழியப்போகையாலே அவற்றை மறிக்கப்போனவிடத்திலே ஶ்ரமஹரமாயிருப்பதொருபொழிலைக்கண்டு திருவாய்ப்பாடியாக நினைத்துப்புக்கான், அப்பொழில் (௨)* மயல்மிகுபொழிலாகையாலே கால்வாங்கமாட்டிற்றிலன்" என்றருளிச்செய்வர் பட்டர். அதுக்குஹேது, அவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும் தமக்குண்டான ஸ்வரூபைக்யப்ரதிபத்தியாலே யருளிச்செய்தார். (கடிபொழில்சூழ் கணபுரம்) பரிமளமே உபாதாநமென்னும்படியான பொழிலாலே சூழப்பட்டதேசம். (௩) † "సర్వగన్ధః-ஸர்வகந்தஃ" என்கிற வஸ்துவையுங்கூடக் கால்தாழப் பண்ணும்படியிறே இப்பொழிலின் பரிமளமிருப்பது. (என்கனியே யென்றும்) அச்சோலைபழுத்தபழமிருக்கிறபடி. எனக்கு பக்வபலம்போலே போக்யமாயிருக்கிறவனே! (என்கனியே) என்று - ஸ்வாதிகாரத்தை வெளியிடுகிறார். ஸாதநாந்தரநிஷ்டர்க்கு ஸாதநஸமாப்தியிலே அநுபவமாகையாலே அவர்களுக்கு அவன் காயாயிருக்கும்; ப்ரபந்நர்க்கு ப்ரபத்திபண்ணின ஸமநந்தரமேபிடித்து போக்யமாயிருக்கையாலே பக்வபலமா யிருக்கும். (என்கனியேயென்றும்)(௪)†"கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ" என்றிருக்குமவரிறே; ஆகையாலே,

---

சோகாவிஷ்டையை யீடுபடுத்துமோவென்ன; அருளிச்செய்கிறார் (தருணௌ இத்யாதி). (காளை) என்று ஸ்வாபாவிகமானபருவத்தைச் சொல்லிற்றுகீழ்; அதுக்குப்பூர்வபாவியாக அருளிச்செய்கிறார் (ரஸாயநேத்யாதி).

பரிமளமே உபாதாநமென்கைக்குஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வகந்தஃ இத்யாதி). ப்ரபந்நர்க்கெல்லாம் ஒத்தால் எங்கள்கனி என்னவேண்டாவோ, (என்கனி) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கண்ணபுரமொன்றுடையானித்யாதி). அல்லாதாரைப்போலன்றிக்கேதாம் இங்கேயற்றுத் தீர்ந்தவராகையாலே தமக்கே கனியென்கிறாரென்றபடி.

---

(௧) ரா-ஆ-ர-௧௯-௧௩. (௩) சாந்தோ-௩-௧௪.
(௨) தி-வாய்-௨-௧-௩௦. (௪) தி-மொ-அ-௯-௩.

(என்கனியே) என்கிறாள். (கனியேயென்றும்) இரண்டுதலையும் மழிக்கப் பார்க்கிறாயோ வென்கிறாள். கனிக்கு போக்தாவையொழி யச் செல்லாது, போக்தாவுக்குக் கனியையொழியச்செல்லாது.

(மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாயென்றும்) போக்தாவுக்கு போ க்யமா யிருக்குமளவன்றியே அம்பலத்திலே. அவல்பொதி யவிழ்ப் பாரைப்போலே ஸமுதாயஸ்தலத்திலே ஸர்வஸ்வதாநம்பண்ணிற் றிலேயோ? (மன்றமரக்கூத்தாடி) மன்றானது கூத்தோடே பொருந் தும்படியாகக் கூத்தாடினவனே! மன்று அமருகையாவது - கூத் தாடிவிட்டாலும் மன்று ந்ருத்தகந்தியாயிருக்கை. "பெருமாளெழுந் தருளிப்புக்க திருவீதிபோலேகாண் திருவாய்ப்பாடியில் அம்பல மிருப்பது" என்றருளிச்செய்வர் பட்டர். மன்று-நாற்சந்திக்கும் பேர்; அம்பலத்துக்கும்பேர். இடையரெல்லாரும் திரள விருக்கிற விடமாயிற்று - அம்பலமாகிறது. அங்ஙனன்றியே, மன்றிலுள்ளா ரைச் சொல்லிற்றாய், இடையரெல்லாரும் அநங்யார்ஹராம்படிக் கீடாக ஆடினபடியென்றுமாம். அதாவது - புறம்பு நெஞ்சுசெல் லாதே "அது, அது" என்று கூத்திலேநெஞ்சுகிடக்கை.

(மகிழ்ந்தாயென்றும்) கூத்துக்கண்டவர்கள் உகக்கையன்றி யே உகப்பானும் தானாயிருக்கை. அவர்களைத் தன்கூத்தாலே எழு திக்கொள்வானும் தானாய் உகப்பானும் தானாயிருக்கிறபடி.

(கூத்தாடி மகிழ்ந்தாயென்றும்) தன் போக்யதையையநுப் வித்த தும்புரு நாரதர்கள்கூத்தாடக்கண்டு உகக்கக்கடவதான்கிடீர் அத்தலையித்தலையாய், கூத்தாடுவானும் தானாய் உகப்பானும தானா யிருக்கிறானென்கிறாள். குடக்கூத்தாடுகைதான் ஈஶ்வரத்வலக்ஷண மோவென்னில்; ப்ராஹ்மணர் ஐஶ்வர்யம் மிக்கால் யாகாதிகளைப் பண்ணுமாபோலேயும், விஷயப்ரவணர் ஐஶ்வர்யம் மிக்கால்§அழித்த ழித்து விவாஹம்பண்ணுமாபோலேயும், இடையருக்கு ஐஶ்வர்யம் மிக்கால் செருக்குக்குப் போக்குவீடாக ஆடுவதாயிற்று குடக்கூத் தாகிறது. அந்தஸஜாதீயபாவத்தில் புரையறுதியாலேகுடக்கூத்தா டினபடியென்கை. ஊர்பொதுவானபண்டங்கிடீர் எனக்கரிதாயிற் றென்கிறாள். அங்காடிபபண்டங்கிடீர் எனக் கரிதாயிற்றென்கிறாள்.

(வடதிருவேங்கடம் மேயமைந்தாவென்றும்) ஒருவூரில் மன்றி லே நின்று கொள்ளைகொடுக்கையன்றியே உபயவிபூதிக்கும் நடு வானமன்றிலேநின்று தன்னைக்கொள்ளைகொடுத்தபடியைச்சொல்லு கிறது. (க) "கண்ணாவானென்றும் மண்ணோர் விணணோர்க்கு" என் னக்கடவதிறே. (மைந்தாவென்றும்) திருமலையிலே நின்று தன்

§ (பா) களித்து. (க) தி-வாய்-க-அ-ங.

பருவத்தையாயிற்று கொள்ளைகொடுத்தது. (க) "வானவர் வான வர்கோனொடும் நமன்றெழுந்திருவேங்கடம்" என்றும், (உ) "கான மும்வாநரமும் வேடுமுடைவேங்கடம்" என்றும் சொல்லுகிறபடி யே - ஈஶ்வராபிமாநிகளோடு நிஹீநஜந்மாக்களோடுவாசியறக் கொள் ளைகொள்ளும்வடிவுகிடீர் எனக்கரிதாயிற் றென்கிறாள். அதவா - (ங) †"ஜ்ஞாநாம்-பக்தாநாம்" என்கிறவடிவு மதிகவர்ஜ்யமாயோ விருப்பதென்கிறா ளென்னவுமாம்.

(வென்றசுரரித்யாதி) தான் போக்யபூதனா யிருக்குமளவே யாய் விரோதிநிவ்ருத்தி ‡ பிறக்கையரிதாய்த்தா னிழக்கிறேனோ? (வென்று) கரதூஷணாதிகளமுதலாக ராவணன்தானே தானும்படி பரிகரத்தைக்கொன்று அஸுரவ்யக்திகளைக்கிழங்கெடுத்தது, அவர்க ளுக்குக் கூடஸ்த்தனான ராவணனை யழியச்செய்த சக்ரவர்த்தித் திருமகனே! † ஸுரவ்யதிரிக்தரிறே ராக்ஷஸரும், அத்தைப்பற்ற (அசுரர்குலங்களைந்த) என்கிறாள். (வேந்தேயென்றும்) (ச) "ராமோ

ராமோராமஇதி ப்ரஜாநாமபவந்கதா:-ராமோராமோராமஇதிப்ர ஜாநாமபவங்கதா:" என்று அநுகூலர் வாய்புலத்தும்படியாய், தத் ப்ரதிகூலர் மண் ணுண்ணும்படியாயிருக்கிறவன்கிடீர் எனககு முகங் காட்டாதொழிகிறான். (ரு) "தாயர் மகிழவொன்னார் தளர" என்றும், (சு) "திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான்" என்றுமிறே வஸ்து ஸ்வபாவமிருபபது.

(விரிபொழிலித்யாதி) அவ்வவதாரத்துக்குப் பிற்பட்டார்க் கும் முகங்கொடுக்கைக்காக சகரவர்த்தித்திருமகன் வந்துநிற்கிற தேசமாயிற்று - திருநறையூராகிறது. ஏகதாரவ்ரதன் வந்துநிற்கிறா னென்று தோற்றும்படியாயிறேயிருபபது. விரியாநின்றிருந்துள்ள பொழிலாலே சூழபபட்ட தேசம், நம்பியும் நாய்ச்சியாரும் கடா க்ஷித்த அக்கடாக்ஷமே வீளைநீராக வளருகிற பொழிலாகையாலே நாள்தோறும்*வர்த்திததுவரக்கடவதிறே. அக்கடாக்ஷம் மாறிவிறே

---

(திருவேங்கடம்மேய) என்றத்தைப்பற்றச் சொல்லிற்று - கீழ்; (மைந் தா) என்றத்தைப்பற்ற (பகதாநாம் என்கிறவடிவு என்கிறது).

ராக்ஷஸரன்றோ இவர்கள், அசுரரென்பானென்னென்ன; அருளிச்செ ய்கிறார் (ஸுரவ்யதிரிக்தரிறே யித்யாதி).

---

‡ (பா) பிறக்கு(பு)பரமாய்த்தான். (ங) ஜி-ஸ்தோ-

(க) தி-வாய்-ஙு-ங-எ. (ச) ரா-யு-கஙு.

(உ) ச-திரு-சஎ. * வர்த்தும்.

பொழில்விரிவும் மாறுவது. (நின்றுயென்றும்) பிராட்டியைத்தேடி அலமந்து திரிந்தவன் அத்தேசத்திலே அவளைக்கண்டவாறே அங்கே தரித்துநின்றபடி. அந்நிலே உனக்கு ஸித்திக்கும்போது எனக்கு முகங்காட்டவேண்டாவோ?எனக்குமுகந்தாராதபோது அவன் முகம் உனக்குக் கிடைக்குமோ? வென்கிறாள்.

(துன்று குழலித்யாதி) இத்தாலும் நம்பியுடைய திருக்குழலையும் வடிவையுஞ் சொல்லுகிறது. அறநெருங்கி இருண்டகுழலையும், காளமேகநிபஶ்யாமமான வடிவையுமுடைய என்துணையே! (க)†* தோளுநான்குடைச் சுரிகுழல் கமலக்கட்கனிவாய்க்காளமேகத்தையிறே இவர்கள் துணையாகப் பற்றுவது. இந்தக்குழலிலும் வடிவிலும்போலே காணும் தானகப்பட்டது. † பிராட்டியைத்தேடித் திரிகிறகாலம் திருக்குழல்பேணுமையாலே ஜடையாய்க்கிடந்தது, கண்டவாறே அவள் கையாலே வகிர்ந்துபேணின குழலாகையாலே (துன்றுகுழல்) என்கிறது.

(என்துணையே) (உ) "ஸ்நிக்தநீலகுடிலகுந்தலம் - ஸ்நிக்த்த நீல குடில குந்தளம்" என்கிற மயிர்முடியையும் வடிவில் ஶ்ரமஹரதையையுங் காட்டி என்னை அநந்யார்ஹையாக்கினவனே! நான் விமுகையானதசையில் ஸத்தையைநோக்கி உன்வடிவழகைக்காட்டி அநந்யார்ஹமாக்கி என்னோடே வந்து ஸம்ஶ்லேஷித்தது என்னையுபேக்ஷித்துப் போகவோ? வென்கிறாள். (துணை) என்று - காந்தனையும் சொல்லக்கடவது, ரக்ஷகனையுஞ் சொல்லக்கடவதிறே. (ங) "இலே துணை" என்னக்கடவதிறே. எனக்கு ப்ராப்யமும் ப்ராபகமுமான வனையென்கை.

(என்றுந்துணைமுலைமேல் துளிசோரச்சோர்கின்றாளே) இப்படி சொல்லாநிற்கச்செய்தே தரைப்படாநின்றாள். (துணைமுலை) போகோபகரணமேயிறே போக்தாவுக்குத்துணை. † அவன்பிரிந்த தசையிலும் முலை துணையாயிறேயிருப்பது. (துளிசோரச்சோர்கின்றாளே)†அது அழிகையாலேதானும்அழிந்தாளென்கிறாள்.(துணையே-

---

துணை-ரக்ஷகனுதல்; காந்தனுதல். அவற்றை வாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிறா (தோளுநான்குடையித்யாதி). பிராட்டியைத் தேடுகையாவது - க்ஷீராப்தியினின்றும்புறப்பட்டு மேதாவி மஹர்ஷியிடத்தில் திருநறையூரிலேவந்திருக்க இங்கே தேடிவந்தார் நம்பி என்கிறகதை.

அவனைத் துணையாகச் சொல்லியிருக்க முலை துணையானபடி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன் பிரிந்ததசையித்யாதி).

(அதழிகையாலே) என்றது - அக்நிகணம்போலே கண்ணீர்விழ அத்தாலே அதுவைவர்ண்யமாகத் தானுமழியா நின்றாளென்றபடி ... (கரு)

---

(க) தி-வாய்-க0-க-க. (உ) (ங) ச-திரு-அ.

என்று சேர்கின்றாளே) விழுவார் "அம்மே!" என்று விழுமது போலே அவன் முகங்காட்டாமையால் வந்த ஆற்றாமையாலே சோ வுபடா நிற்கச்செய்தேயும் அவனைத் துணையாகச்சொல்லித்தரைப் படாநின்றாள். துணையான நான், "என்முகம் பார்க்கவல்லனே" என்று பரார்த்தியாநிற்கத் தான் துணையாக நினைத்தவன் முகங்காட்டாதே யுபேக்ஷித்துப்போகாநிற்கப் பின்னையும் அவன்முகத்தை ஆகாங்க்ஷித்துத் தரைப்படாநின்றாள். இதுபோலேகாணும் பகவத்ஸம்பந்த யுக்தனிருக்கு மிருப்பு. விஷயாந்தரங்கள் தான் மேல் விழா நின்றாலும் அத்தைக்காற்கடைக்கொண்டிருக்கையும் அவன் உபேக்ஷகனானாலும் அவனை யொழியச்செல்லாதே யிருக்கையுமிறே பகவத் ஸம்பந்தயுக்தன்படி. தாய்ரக்ஷைகயாக வபிமாநியாநிற்கச் செய்தே அவளைக் காற்கடைக் கொண்டாளிறே. (கசு)

மூ.—பொங்கார்மென்னிளங்கொங்கைபொன்னேபூப்பப்
பொருகயல்கண்ணீரரும்பபபோந்துநின்று
செங்காலமடப்புறவம்பெடைக்குபபேசும்
சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித்து, ஆங்கே
தண்காலும்தண்குடந்தைநகரும்பாடித
தண்கோவலூர்பாடியாடக்கேட்டு
நங்காய்நங்குடிக்கிதுவோநன்மையென்ன
நறையூரும்பாடுவாள்நவில்கின்றாளே. (கஎ)

பதம்.—பொங்கு, ஆர், மென், இளம், கொங்கை, (ரு) பொன்பூப்ப, பொரு, கயல், கண், நீர், (க0) அரும்ப, போந்து, நின்று, செங்கால, மடம், (கரு) புறவம், பெடைக்கு, பேசும், சிறு குரலுக்கு, உடலுருகி, (உ0) சிந்தித்து, ஆங்கே, தண்காலும், தண்குடந்தைநகரும், பாடி, (உரு) தண், கோவலூர், பாடி, ஆட, கேட்டு, (ந0) நங்காய், நங்குடிக்கு, இது, நன்மையோ வென்ன, நறையூரும், (நரு) பாடுவாள், நவில்கின்றாள். (நஎ)

உரை.—வளர்த்தி, மிக்கதாய், ம்ருதுவாய், இளையதான, ஸ்தநங்களிலே, (ரு) வைவர்ண்யமுண்டாக, ஒன்றோடொன்றுபொருகிற, மத்ஸ்யம்போன்ற, கண்களிலே, நீர்த்துளிகள், (க0) அரும்பியாநிற்க, (தாயாரைவிட்டுப் புறம்பே) வந்து, தரித்துநின்று, சிவந்தகால்களையுடைய அறிவழிந்து கிடக்கிற, (கரு) ஆண் புறாக்களானவை, தம்பெடைகளுக்குச், சொல்லுகிற, சிறியகண்டத்வநிக்கு, மெய்கரைந்து (உ0) அவன்முறைகெடப் பரிமாறும்படியை நினைத்து, அப்போதும், திருத்தண்காலையும், குளிர்ந்த திருக்குடந்தை நகரத்தையும் (ப்ரீதிக்குப் போக்கு விட்டுப்) பாடி (உரு) ப்ரமஹரமணை, திருக்கோவலூரைப், பாடி, கூத்தாட, அதைக்கேட்டு, (ந0) ஸ்த்ரீத்வ பூர்த்

நிலையுடையவளே! நம்முடையகுலத்துக்கு, வாய்விட்டுக் கூப்பிடுகிறவித்து, நலந்தானே வென்று சொல்ல, திருநறையூரையும், ௩௭) பாடுவதாகநினைத்து, ஆரம்பிக்கிறாள். (௩௭) ... ... .. ... ... .. (௧௪)

வ்யா.—பதினேழாம்பாட்டு. (பொங்கார்) இவள் முழுமிட்டு செய்து கூப்பிட்டு அதனோடே தரைப்பட்ட படியைக்கண்டு, "இவி யும் வீணையும் ஆஶ்வாஸஹேதுவாமென்று அவற்றை முன்னேவை த்துப் பார்த்தோம், அவையும் அகிஞ்சித்கரமாயிற்று" என்று அவற் றை†ஒருங்கவிட்டு, "நாம் ஹிதம்சொன்னால் அது ஜீவிக்கையாமோ" என்று பார்த்து, "நீ இங்ஙனே வாய்விட்டுக் கூப்பிடுகையும் மோஹி க்கையுமாகிற இது உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போராது, இக் குடிக்கும் அவத்யம்" என்ன; "அவற்றையோநான் இப்போது பார் த்திருக்கிறது" என்ன; "அதுதான் கிடக்க, நீதான் ஆதரிக்கிற விஷ யந் தன்னைப்பேண வேண்டாவோ? 'ஆசாலேச முடையார்க்கு முக ங்காட்டக்கடவவஸ்து தன்னை யொழியச்செல்லாமையாலே நோவு பட்டுக் கூப்பிடுகிற ப்ரணயிநிக்கு முகங்காட்டாதொழிவதே!' என்று நாட்டார் சொல்லும் அவத்யத்தைப் பரிஹரிக்கவேண்டாவோ?" என்ன; "எனக்கோடுகிறதசையை யறியாதே ஹிதஞ்சொல்லுகிற இவள்முகத்திலேவிழியாதே, பிரிந்தார்படும் நோவையறியுமவன்மு த்திலே விழிக்கவல்லேனே என்று அவனைப்பற்றிக் கூப்பிடுகிறாள்.

(பொங்கித்யாதி) தான் படுகிறபாடித்தனையும் எதிர்த்தலை யைப் படுத்தக்கடவதான பரிகரத்தையுடையவள்கிடீர் அத்தலை யித்தலையாய்த் தான்படுகிறாள். †வளர்த்திமிக்கு ம்ருதுவாய் இளைய தானமுலை. பொங்கார்ந்தமுலை - மேலேமேலே வளராநிற்பதாய்ச் சுற்றுடைத்தானமுலை. ஆர்ந்திருக்கையாவது-சுற்றுடைத்தாயிருக் கை. (மென்-கொங்கை) முலைக்குக் காடிந்யம் ஸ்வபாவமாயிருக்க, மென்முலை என்கிறது - விரஹஸஹமல்லாத முலையென்கைக்காக. (இளங்கொங்கை) உத்யோகித்தவளவா யிருக்கை † நரம்பில்லாத முலையென்கை. (பொன்னேபூப்ப) ஸ ேக்ஷத்ரம் * மணல்மேடா ற்போலே அவனுக்கு போகோபகரணமானமுலையை வைவர்ண்

---

பதினேழாம்பாட்டு.—(பொங்கார்) ஒருங்கவிட்டு - இரண்டையுங்கூட ஓரிடத்திலேவைத்து.

(பொங்கார்) ஆர்தல் - மிகுதியாதல், பரம்புதலாதல்; சுற்றுடைமைய தல். இவற்றை யருளிச்செய்கிறா (வளர்த்திமிக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) (நரம்பில்லாத) - முற்றாத. வைவர்ண்யம் என்னுமல் (பூப்ப) என்பானெ

---

* "வண்டலிட்டாப்போலே" என்றும்பாடம்.

யும்கொண்டுபோயிற் றென்கிருள். (பொன்னேபூப்ப) † ஒருகற்பகக் கன்று † கோட்புக்காப்போலே யிருக்கிறதாயிற்று-தனக்கு இவளு டைய முலையின் வைவர்ண்யம். †பண்டு அவனேட்டைக் கலவியால் ஆபரணம் பூட்டினற்போலே இப்போது பிரிவுக்கு ஆபரணம் பூட் டினபடி. †வினவவந்தார்க்குத் தன்னளவைச்*சாதித்துச் †சொல்லு கிருளித்தனையொழியத் தனக்கு இது தர்சநீயமாயிறே யிருக்கிறது.

(பொருகயல்கண்ணீரரும்ப) ஸதாதர்சநத்துக்கு உபகரணமான கண்ணும் அழிந்ததென்கிருள். (பொருகயல்கண்) †அவனைப் பொரு கிறகண்ணென்னுதல்; தன்னிலேபொருகிற கண்ணென்னுதல்.(கயல் கண்) கயல்போலே மிளிரா நின்றுள்ளகண். எப்போது மொக்க அலமாப்பேயாயிற்று இவள்கண்ணுக்குள்ளது. ஸம்ஶ்லேஷதசை யில ஹர்ஷத்தாலே அலமாக்கும்; விஶ்லேஷ தசையில் சோகத்தா லே யலமாக்கும். முலையிலே வைவர்ண்யம் குடியிருந்தாற்போலே கண்ணிலே சோகாஶ்ரு குடியிருந்தது. அவனுடைய ஸதாதர் சநத்துக்கு விஷயமான கண்கிடீர் சோகாஶ்ருவுக்கிலக்காயிற்றென்கி ருள். "துணைமுலைமேல் துளிசோர" என்றது-கீழ்; இங்கு-விரஹா க்கியாலே நீர்ப்பசையறும்படி உள்ளுலர்ந்து கிடக்கையாலே (அரு ம்ப) என்கிறது. † பதக்குப்பானையிலே உழக்குப்பாலைககாய்ச்சினல் ‡ வாயாலே அறப்பொங்காநிற்கச் செய்தே கீழ் நீரறறிருக்குமா போலே உள் அடியற்றிருக்கை.

(போந்து) "அவன் மேல்விழும்படியான முலையழகையும் கண் ணழகையு முடையநீ மேல்விழுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராது காண்" என்று தாயார் சொன்னஹிதம் தனக்குஶ்ரவணகடுகமா யிரு க்கையாலே நெருப்புப் பட்டவகத்தில்நின்றும த்வரித்துப் புறப்படு மாபோலே அவளிருந்த வகததில் நின்றும் புறபபட்டாள். ஸ்ரீ விபீஷ ணாழ்வான் சொன்ன ஹிதத்தைக்கேட்ட ராவணன், (க) "ஞ்லம்

---

னென்ன; அருளிச்செய்கிருர் (ஒருகற்பகக் கன்றித்யாதி). (கோட்புகை) - புதுமரம் புதுசாகப்பூக்கை. ஸமஶ்லேஷதசையில நிறமன்ருே போக்யமா யிருப்பது, இது போக்யமோவென்ன; அருளிச்செய்கிருர் (பண்டித்யாதி). போக்யமானல் வெறுப்பானென்னென்ன; அருளிச்செய்கிருர் (வினவவந்தா ர்க்கித்யாதி). (சாதிக்கை) - மறைக்கை.

அவனை, (பொருகை) - ஈடுபடுத்துகை. (அரும்ப) என்கைக்கு ஆற்று மமட்டமாயிற்ருே வென்ன; அருளிச்செய்கிருா (துணைமுலைமேலித்யாதி). நீர்ப்பசையற்ருல அருமபத்தான் கூடுமோவென்ன; அருளிச்செய்கிருர் (பத க்குப்பானையித்யாதி).

---

* பாடம். ‡ வாயிலேவர என்றும் பாடம்.
(க) ரா-யு-௧௬-௫௫.

ధన్కూలపాంసనమ్-த்வாந்துதிக்குலபாம்ஸநம்" என்ன, (க) "అజగామ ముహూర్తేన - ஆஜகாமமுஹூர்த்தேந" என்று - அத்தலையில் ஒரு க்ஷணமுந் தரியாதே சடக்கெனப் புறப்பட்டாற்போலே. (நின்று) அவன் ஸந்நிதியில் நின்றும் போந்தபின்பு தரித்து நின்றபடி. (உ) † "ఉత్తరం తీరమాసాద్య ఖస్థ ఏవ వ్యతిష్ఠత-உத்தரம்தீரமாஸாதய கஸ்த்த ஏவவ்யதிஷ்ட்டத" என்று மஹாராஜப்ரப்ருதிகள், (ங) "వధ్యతాం వధ్యతాం-வத்யதாம்வத்யதாம்" என்னுகிற்க, பெருமாள் விஷயீகரியாதிருக்க, ஆகாசத்திலே தரித்துநின்றாற்போலே.

(செங்காலவித்யாதி) அவள் சொன்ன ஹிதம் தனக்கு பாதகமாகையாலே உள்ளுநின்றும புறப்பட்டாள், புறம்பு தருஷ்டிவிஷயமாயிருந்தது, ஆகையாலே புறம்பு யாரிடத்திலும் புகல்பெற்றிலன், இத்தால் - ஸம்ஸாரம் உள்ளோடு புறம்போடு வாசியற ஸார்வத்ரிகமாக துக்கமாயிருக்கையாலே * போகஸ்த்தாநம் ஒருதேச விசேஷமேயென்கை. (செங்காலமடப்புறவம்) ஸம்ஶ்லேஷ தசையில் தன் தலையிலே வைத்துக்கொள்ளுமவன்காலுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. (மடப்புறவம்) மடப்பத்தால் - இப்போது அறிவின்மையைச் சொல்லுகிறதன்று, அக்காலத்தில் உணர்த்தி யழிந்து பரிமாறும்படிக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி.

(பெடைக்குப் பேசுஞ் சிறுகுரலுக்கு) ஸம்ஶ்லேஷதசையில் அவன் தன்னைக்குறித்துப் பண்ணும நீசபாஷணங்களுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. (சிறுகுரல்) ஸம்ஶ்லேஷதசையில் *பலஹாநியாலே சொன்னசொல்லென்னுதல்; அஷட்கர்ணமான சொல்லென்னுதல். †அத்தலைக்குத் தான்சொல்லும் நீசபாஷணங்கள் ஸதஸ்யமல்லாமையாலே தன்செவியிலே யாயிறறு அவன் சொல்லுவது. (உடலுருகி) ‡அதின்வடிவைக்கண்டு நெஞ்சுருகிற்று, பேச்சைக்கேட்டு உடலுருகிற்று. (சிந்தித்து) அத்தசையில் அவன் பண்ணும் வ்ருத்தி விசேஷங்களைச் சிந்தித்து; - பரியட்டம் மாறுவது, அஞ்சலியைப் பண்ணுவதாய்க்கொண்டு முறையழியப் பரிமாறும்படியைநினைத்து

† அபிமதம் பெறாமல் தரித்து நிற்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தரம் தீரமித்யாதி).

* புறவம் - மாடப்புறா.

‡ அஷட்கர்ணமாகச் சொல்லவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அத்தலைக்கித்யாதி). நெஞ்சுருகியே உடலுருகவேண்டுகையாலே அர்த்தாத்ஸித்தம்.

* భోగస్థానమ్. * బల.

(க) ரா-யு-௩௯-க. (ங)

(உ) ரா-யு-௩௯-௧௦.

(ஆங்கே) அத்தசையில். இவை பாதகமானால் தாய்சொன்ன ஹிதத்தைக் கேட்கையிறே ப்ராப்தம், அத்தசையிலும், (தண்கா லித்யாதி) அவனோடுபரிமாறும் ஸங்கேதஸ்த்தலங்களைப் பற்றிக் கூப்பிடா நின்றாளென்கிறாள். (தண்காலும்) திருத்தண்காலில் வர்த் திக்கிறவனுடைய ஸ்வபாவத்தைப்பற்றி, (தண்கால்) என்று திருப் பதிக்குப் பேராகிறது. ஸ்ரமஹரமான காற்றென்கை. தென்றல் போலேஸுகஸ்பர்சமும்ஸ்ரமஹரமுமான வடிவையுடையவன் வர் த்திக்கிற தேசமாகையாலே "தண்கால்" என்று - திருநாமமாகி றது. தன்னை அவன் அடியில் அணைக்கிறபோது ஸ்ரமஹரமாயி ருக்கையாலும் ஸுகரூபமாயிருக்கையாலும் (தண்கால்) என்று கூப்பிடுகிறாள்.

(தண்குடந்தைநகரும்பாடி) ஆஸ்ரிதரோடு முறையழிய ஸம் ஶ்லேஷித்த விடமாயிற்று திருக்குடந்தை. (க) "త్వదీయభుక్తోజ్ఝిత శేషభోజినా-த்வதீயபுக்தோஜ்ஜித சேஷபோஜிநா" என்கிறபடியே - சேஷி அமுதுசெய்தப்ரஸாதம் சேஷபூதன் ப்ரதிபத்திபண்ணுகை முறையாயிருக்க, ஆராவமுதாழ்வார், தமக்காக்கின திருபபோனக த்தை முற்படத் திருமழிசைப்பிரானை அமுதுசெய்யப் பண்ணிப் பின்னையிறே தாம் அமுதுசெய்தது; அவரும், வாத்ஸல்யாதிச யத்தாலே வந்ததாகையாலே வழக்குப்பேசமாட்டிற்றிலர். இததால்- தனக்கு ப்ரயோஜநமென்னென்னில் ; தோழிமார்பேறும்தன்பேறு யிறே இவளுக்கிருப்பது.

(தண்கோவலூர்பாடி) ஆஸ்ரிதர்வந்து கிட்டினால் பின்னை அவர்களோடு முறையழியப் பரிமாறுகையன்றியே தானே மேல் விழுந்து ஸம்ஶ்லேஷித்தவிடமாயிற்று - திருக்கோவலூராகிறது. அவர்கள்மழைகண்டு ஒதுங்க அவர்களிருந்தவிடத்திலேதானேசெ ன்று தன்னை அவர்கள்நெருக்கத தான்அவர்களைநெருக்க இப்படி பரிமாறிஅவர்கள் போனவிடத்திலும் அவ்விடத்திலே நிற்கிறானிறே (௨) "வாசல் கடைகழியாவுள்புகா" என்று. (பாடி) தனக்கு முகங் கொடுத்த தேசத்தையும், § தன்பேறுடையார்க்கு முகங்கொடுதத தேசத்தையும் நினைத்து முன் பட்டக்லேசத்தையும் மறந்து ப்ரீதி ப்ரேரிதையாய்க்கொண்டு சொல்லி. (ஆட) அவ்வளவில் பர்யவஸி யாத காயிகமான விக்ருதியைச் சொல்லுகிறது. *(கேட்டு) இவள்

---

தனக்கு முகங்கொடுத்தது திருத்தண்கால், இப்போதநுபவிப்பித்தவன் திருத்தண்காலூரானென்றபடி.

---

(க) ஸ்தோ-ம-. (௨) க-திரு-அசு.

§ தன்னுடையார்க்கு.

ஆடுகிறபடியைக்கண்டு பாடுகிறபடியைக் கேட்டென்கை. (பாடி யாடக்கேட்டு) இவள் என்னபேறுபெற்றுத்தான் இங்ஙன் ஸம்ப்ரமிக்கிறதென்கிருள்.

(நங்காய்) †*"முகரி" என்று பூர்வர்கள் நிர்வாஹம். அதாகிறது-அவன்றான் மேல்விழுகிறதொழிய நீ விதக்த்தையாய் இபபடி மேல் விழக்கடவையோவென்கை. அதவா, "பூர்ணையானவளே!" என்று பட்டரருளிச்செய்வர். (க) "த த்ஸ்யஸத்ருஶம்பவேத் -தத்தஸ்யஸத்ரு சம்பவேத்"என்றிருக்கும்பூர்த்தியன்றோ வுன்னுடையபூர்த்தி. அங்ஙனன்றியே, உன்பூர்த்திகொண்டு இக்குடிவாழவிருந்தபடிஇதுவோ வென்னவுமாம். (நங்குடி) "ப்ரபந்நக்குடி' என்கிறவிது வேறேயொருகுடிபோலேகாணும். (நங்காய்) †அவனுக்கு ஸதாத்ர்சநம் பண்ண வேண்டும்படியான 'வடிவையுடையை; அவன்றானே வந்து மேல் விழும்படியான போகோபகரணங்களையுடையை ; †அவிளம்ப்ய பலப்ரதமான ஸாதநத்தையுடையை ;(க) த த்ஸ்யஸத்ருஶம்பவேத் - தத்தஸ்யஸத்ருசம்பவேத்" என்றிருக்கும் ஜ்ஞாநத்தையுமுடையை. இப்படி யிருக்கிற நீ அபூர்ணரைப்போலே கூப்பிடக்கடவையோ? (இதுவோநன்மை) தன்பூர்த்திகொண்டுவாழவிருப்பார்க்கு நீபண்ணும் நன்மையாகிறது - வாய்விட்டுக் கூப்பிடுமிதுவோ? இக்குடி விளங்கப் பிறந்த நீ இக்குடிக்கு அவத்யத்தை விளைக்கக்கடவையோ? (என்ன) இப்படி சொல்ல. மீளுகை தவிர்ந்து (நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே) மீட்கவொண்ணாத விடத்தேபுக்காள். இன்னங் குடிகொண்டு உண்ண விருக்கிறீர்களோ வென்று †ஆசிலே கைவைக்கப்பார்க்கிருள்.

(நறையூருமித்யாதி) அவஸ்த்தையை யறியாதே ஹிதஞ்சொல்லுகிறவிவள்முகத்திலே விழியாதே பிரிவால் வந்த ஆற்றாமையறியும் வருத்த தாய்முகத்திலேவிழிப்பதெப்போதோ வென்கிருள். (உ) "அகலகில்லேனிறையும்" என்றிருக்குமவளாகையாலே ஆற்றாமை யறியுமிறே. அங்ஙனன்றியே நம்பியைப்பற்றிக் கூப்பிடுகிறாளாகவுமாம்.பிராட்டியைத் தேடித்திரிந்து கண்டவனாகையாலே ஆற்றாமை

(முகரி) என்று - ப்ரதாநையாய், அத்தாலே - வைதக்த்யத்தால் வந்த ப்ராதாந்யம். நங்காய் - வ்யங்க்யம். மூன்றுமர்த்தம். - இவையெல்லாப்பதங்களையும் பற்றி அருளிச்செய்கிறார் (அவனுக்கு ஸதாதர்சநமித்யாதி). (அவிளம்ப்யபலப்ரதம்) - ஆற்றாமை; (ஆசிலே) - சாடு; பாடுகை - அர்த்தம்; ஆயுதத்திலே - த்வநி.

* முகரீ.

(க) ரா-ஸு-கஎ-கூஉ.

(உ) தி.வாய்-கூ-கo-கo.

யறியுமிறே; என்னுற்றுமை யறியும் தாய்முகத்திலும் தமப்பன்முக த்திலும் விழிப்பதெப்போதோவென்கை. (பாடுவாள் நவில்கின்று னே) பாடுவாளாக நினைத்து ஆளத்தியையாநின்றாள். † பாடுகையா வது - மடலெடுததவோபாதி யிறே. (நவில்கின்றாள்) நுணுகாநின் றாள். பாடிறுளாகிற் கடலேயிறே குடியென்கை. இத்தால் - ஆளத்தியிலே கருத்தறியும் தாயாருடைய † பாட்டில் நைபுண்யந் தோற்றுகிறது. ... ... ... ... ... (கள)

மூ.—கார்வண்ணந்திருமேனிகண்ணும்வாயும்
கைத்தலமுமடியிணையுங்கமலவண்ணம்
பார்வண்ணமடமங்கைபத்தர்பித்தர்
பனிமலர்மேல்பாவைக்குப்பாவஞ்செய்தேன்
ஏர்வண்ணவென்பேதையென்சொல்கேளாள்
எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்
நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னும்
இதுவன்றோநிறைவழிந்தாநிற்குமாறே. (கஅ)

பதம்.—காரவண்ணம், திருமேனி, கமலவண்ணம், கண்ணும், வாயும், (இ) கைத்தலமும், இணையடியும், பார்வண்ணமடமங்கை, பத்தர், பனி, (கo) மலர்மேற்பாவைக்கு, பித்தர், பாவஞ்செய்தேன், ஏர்வண்ணம், என்பேதை, (கஇ) என்சொல், கேளாள், எம்பெருமான், திருவரங்கம் எங்கேயென்னும், நீர்வண்ணன், (உo) நீர்மலைக்கு, போவேனென்னும், நிறைவழிந்தார், நிற்கு மாறு, இதுவன்றோ. (உஇ)

உரை.—கறுத்த நிறத்தை யுடைய, திருமேனியையும், செந்தாமரை மலரையொத்த, திருககண்களையும், திருப்பவளத்தையும், (இ) திருக்கைத்த லங்களையும், பரஸ்பரஸத்ருசமான திருவடிகளையு முடையனாய், பூமியை ப்ர காரமாகவுடையளாய் மடப்பத்தை யுடையளான பூமிப்பிராட்டிக்கு, இட்ட வழக்கா யிருக்குமவனாய், குளிர்ந்த, (கo) செந்தாமரை மலரிலெழுந்தருளி யிருக்கிற பெரிய பிராட்டியார் விஷயத்தில், அதி வ்யாமுக்த்தனான ஸர்வேஸ் வரன் விஷயத்திலே, பாபத்தைப்பண்ணினேன்; (அதென்ன வென்னில்;) - அழகியவடிவையுடைய, என் பெண்ணானவள், (கஇ) என்னுடைய வார்த்தை யை, கேட்கிறாளில்லை. என்னை அநங்யார்ஹை யாக்கினவனுடைய, கோ யிலானது எங்கே யென்று கேட்கிறாள். கடலின் நீர்போன்ற நிறத்தையு டையவன் எழுந்தருளியிருக்கிற, (உo) திருநீர்மலைக்கு, போவே னென்கிறாள்; தம்முடையஸ்த்ரீத்வமழிந்தவர்கள், நிற்குமப்ரகாரம், இதுவன்றோ? (உஇ) ()

---

* பாடிறல் விரோதமேதென்ன; அருளிச்செய்கிறார் (பாடுகையாவதித் யாதி) பாடவுத்யோகித்தவளவிலே இன்னபாட்டுபாடப் போகிறாளென்று தாயாரறிகையாலே நிபுணையென்றபடி. (கள)

வ்யா.—பதினெட்டாம்பாட்டு. (கார்வண்ணம்) "நங்காய்நங்குடிக்கிதுவோ நன்மை யென்ன நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே" என்று தான்சொன்னஹிதத்தைக்கடந்தபடியாலே, "இனி, இவளை ஹிதஞ்சொல்லிமீட்கையென்று நமக்கொன்றில்லை" என்று † கூடி உடன்பட்டு, "இவள்கருத்தைக் கேட்போம்" என்றுபார்த்து, "உனக்கோடுகிற தென்" என்ன; இங்கிருந்து கூப்பிடக்கடவேனல்லேன், அவனிருந்ததேசத்தேறப் போகக்கடவேன்" என்ன; "அளவுடையாரும் குமிழிநீருண்ணும்விஷயத்திலே தான் மேல்விழுந்தநுபவிக்கவினையாநின்றாள், இதுவன்றோ ஸ்த்ரீத்வத்தைப்பாராதேவிஷயவைலக்ஷண்யத்தைப்பார்த்தார்படியிருக்கும்படி" என்று வினவவந்தார்க்குச்சொல்லுகிறாள். (நிறைவழிந்தார்நிற்குமாறு - இதுவன்றோ) என்று - இவளுக்கு ப்ரணயத்திலுண்டான தேசிகத்வம் தனக்கிஷ்டமென்னுமிடம் ஹார்த்தமாய்ப் போந்தது, அத்தை இங்கே ப்ரகாசிப்பிக்கிறாள்.

இவ்விடத்திலே ஓரர்த்தத்தைத் தாயார் வார்த்தையாலே பூர்வபக்ஷித்து †மகள்வார்த்தையாலே ஸித்தாந்திக்கிறது. ப்ரதமத்திலே ஸ்வரூபத்தை யுணர்ந்து பின்னை ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்திலே யிழியவேண்டாவோவென்றாயிற்றுத் தாயார் ஸித்தாந்தம். அது வேண்டுகிறதென்னென்னில்; சாஸ்த்ரங்களில் ஸ்வர்க்காதிகளையும் புருஷார்த்தமாகச் சொல்லுகையாலே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த மிதுவென்று நிர்ணயிக்கும்போது ஸ்வரூபம் முன்னாக வேணுமென்கை. அதோரர்த்தமன்றுகாண், போகாநுரூபஸ்வரூபமா மித்தனையொழிய ஸ்வரூபாநுரூபமாயோ போகமிருப்பது என்றாயிற்று மகள்ஸித்தாந்தம்.

(கார்வண்ணந்திருமேனி) இவளுடைய ஸித்தாந்தமே ஸித்தாந்தமென்னுமிடத்தை வினவவந்தார்க்கு மூதலிக்கிறாள். † திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்திலே யிழிந்து, பின்னை த்ருதீயபதத்திலே யிழிதவளோ விவள், ப்ரதமத்திலே வடிவிலே யன்றோ இவளிழிந்தது †அநர்த்தஹேதுவாயிருக்கும் வடிவைப்பற்றிப் புருஷார்த்தமென்கின்றவென்பெண்ணைத் தன்வடிவைக்காட்டியன்றோ அவற்றில் து

---

பதினெட்டாம்பாட்டு.—(கார்வண்ணம் திருமேனி) (கூடி)-மகளோடே கூடி. (மாள் வார்த்தையாலே ஸித்தாந்திக்கையாவது):"கார்வண்ணம்" என்று தொடங்கி, "பனிமலர்மேற்பாவைக்கு" என்னுமளவும் விஷயவைலக்ஷண்யத்தைச் சொல்லி, இப்படிப்பட்ட விஷயத்திலே முறைகெட இழியப்பார்க்கிறாளென்கையாலே - போகாநுரூபமான ஸ்வரூபமே ஸித்தாந்தமென்கை.

போகாநுரூபஸ்வரூபமே ஸித்தாந்தமாகவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருமந்த்ரத்திலித்யாதி). ப்ரதமத்திலே த்ருதீயபதத்திலே யிழிவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அநர்த்தஹேதுவா யிருக்கும யாதி). அவன காட்டிக்கொடுக்கையாலே காண்பாளென்றபடி. துவக்கு

த்துத்தது;- † ஸௌந்தர்யபோக்யமானவடிவிலேயன்றோ இவள்ப்ரதமத்திலே யீடுபட்டிருந்ததென்கிறாள். †(க)"ఏషసర్వస్వభూతస్తు పరిష్వఙ్గో హనూమతః- ஏஷஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமதஃ" என்று -அடிமை செய்தார்க்குப் பரிசிலாகக்கொடுத்ததும் வடிவையிறே. (உ) "మామేకం శరణం వ్రజ- மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்றதும் - உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழற்கற்றையுமாய் நின்ற வடிவைக்காட்டியிறே. † ப்ராப்யத்தில் மேலெல்லையான வடிவன்றோ இவளுக்கு விஷயாந்தரப்ராவண்ய நிவ்ருத்திக்குப் பரிகரமாயிற்றது. அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒரு தேசவிசேஷத்திலே செல்லுகிறதும் பூர்ணஷாட்குண்ய விக்ரஹத்தை யநுபவிக்கைக்கிறே.

(கார்வண்ணம்) தாபத்ரயாதுரர்க்குத் தாபஹரமாய் விரஹதாபாதுரர்க்கு விரஹதாபத்தைப போக்கக்கடவதா யிருக்கும் வடிவிறே. (கண்ணுமித்யாதி) அம்மேகம் பரப்புமாறத் தாமரை பூத்தாற்போலேயாயிற்று - காளமேகநிபஶ்யாமமான வடிவுக்குப் பரபாகமாய்க்கொண்டு திவ்யாவயவங்களிருப்பது. இப்படியிருப்பதொரு மேகமுண்டாகிலிறே வடிவுக்கு த்ருஷ்டாந்தமாவது. இது அபூதோபமை. (கண்ணும் வாயும கைத்தலமுமித்யாதி) † இவளுடைய வாத்ஸல்யாதிகுணங்களிருக்கிறபடி. † ஸ்வரூபமடியாக விழிந்தபோற ஸ்வரூபாஶ்ரயமான குணங்கள் உபாயமாவது, ரூபமடியாக விழிந்தவளாகையாலே ரூபகுணங்களேயாயிற்று இவளுக்கு உபா

---

கும்படி போக்யமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யபோக்யமானவித்யாதி). கீழ்வாக்யத்தாலும் இத்தாலும் - விக்ரஹமே ப்ராப்யப்ராபகமென்னு மிடம் சொல்லிற்று; அப்படி விக்ரஹமே ப்ராப்யமும் ப்ராபகமுமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஏஷஸர்வஸ்வபூதேத்யாதி வாக்யத்வயத்தாலே). ஸ்வரூபகுணங்களிருக்க விக்ரஹமே யிரண்டுக்கும் வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ப்ராப்யத்தில் மேலெல்லை யித்யாதி வாக்யத்வயத்தாலே). ப்ராப்யமான ஸ்வரூபகுணங்களுக்குப்ரகாசகமாகையாலே விக்ரஹத்தை எல்லையான ப்ராப்யமென்கிறது.

இவளுடைய வாத்ஸல்யாதியாவது - ஸ்வரூபத்தை ஆஶ்ரயிக்கிறவர்களுக்கு ஸ்வரூபகுணமான வாத்ஸல்யாதிகளை முன்னிடவேண்டுமாபோலே - விக்ரஹத்தை ஆஶ்ரயிக்கிறவர்களுக்கும் விக்ரஹ குணமான ஸௌந்தர்யாதிகளை முன்னிடவேண்டுகையாலே அவயவங்களை (இவளுடைய வாத்ஸல்யாதி யென்கிறது). விக்ரஹகுணம் உபாயமாகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபமடியாகவித்யாதி). ஸ்வரூபமடியாகவிழிய வேண்டாவோவெ

---

(க) ரா-யு-க-கச. (உ) கீதை-கஅ-சுசு.

யம். † ஸம்ஸாரபயபீதிபூர்வகமாக ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை யுணர்ந்து, பூர்வ வ்ருத்தத்தையு முணர்ந்து, தத்பரிஹாரார்த்தமாக திவ்யாத்மகுணங்களிலே யடியிட்டிழிந்தவளன்றோ இவள்.

(கண்ணும்) (க)† தூதுசெய் கண்ணிறே. தன்பக்கல் விமுகராய்ப் போருவாரையு மகப்படக்காலைக்கட்டித் துவக்குவிக்கும் கண்ணிறே. § "ஜிதம் தே புண்டரீகாக்ஷ - ஜிதம்தேபுண்டரீகாக்ஷ" என்று ப்ரதமத்திலே ருசிஜநகமாயிருப்பது கண்ணிறே; (உ) "புண்டரீகாக்ஷநஜாநே ஶரணம் பரம் - புண்டரீகாக்ஷநஜாநேசரணம்பரம்" என்று ருசிபிறந்தார்க்கு உபாயமாயிருப்பதும் கண்ணே; (ங) "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவுந்தலைமகனை" என்று பராப்திதசையில் ஸதாதர்சநத்துக்கு விஷயமாயிருப்பதும் கண்ணேயிறே. (வாயும்) அக்கண்ணிலே துவக்குண்டாரை நெடுங்காலம் இழந்த விழவெல்லாம் தோற்றும்படியாக ஸாந்த்வநம பண்ணும்முறுவலும். "ஸாபராதரான நம்மளவிலே திருவுள்ள மென்னாயிருக்கிறதோ" என்று கூச்சத்தோடே கிட்டினால் "நிரபராதர் நாம்" என்று அவர்கள் தாங்களே தங்களை நினைக்கும்படியாயாயிற்று முறுவலிருப்பது. அபராதத்துக்கு † நேர்ததாவுகொடுக்கும் முறுவலிறே.

(கைத்தலமும்) கிட்டினாரை (ச) "மா ஶுச: - மாசுச:" என்னும் கையும். (ரு) "அணிமிகுதாமரைக்கையையந்தோ வடிச்சியோம் தலைமிசைநீயணியாய்" என்று ப்ராப்யமாயிருப்பதும் இக்கையிறே. (அடியிணையும்) அக்கையைக்கண்டு நிர்ப்பயரானார் அநுபவிக்க இழியுந்துறையான திருவடிகளும். (சு) "லோகவிக்ராந்தசரணௌ - லோகவிக்ராந்தசரணௌ" என்று - ஆஶ்ரயணீயமாயிருப்பதும் திருவடிகளே. (எ) "த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி - த்ரிவிக்ரமதவச்சரணாம்புஜதவயம்மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்றும், (அ) "படிககளவாக நிமிர்தத நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும் சொல்லுகிறபடியே போக்யமா யிருப்

---

ன்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரபயபீதியித்யாதி). போகபரையாகையாலே யென்று பலிதம்.

ஸ்வரூபகுணங்களோபாதி விக்ரஹகுணங்களும் உபாயமுமாய் உபேயமுமா யிருக்குமென்னுமதனை யருளிச்செய்கிறார் (தூதுசெய்கண் இத்யாதி வாக்யங்களாலே).

(நேர்த்தரவு) - பொறுத்தோமென்கை.

---

(க) தி-வாய்-கூ-ங-க.
§ ஜி-ஸ்தோ-க.
(உ) ஜி-ஸ்தோ-அ.
(ங) தி-வாய்-உ-சு-ங.
(ச) கீதை-கஅ-சுசு.
(ரு) தி-வாய்-க0-ங-ரு.
(சு) சுத்ரத்ர-க.
(எ) ஸ்தோ-ர.
(அ) தி-தாய்-அ-உ-க.

